ரூ. 5.00

திருவள்ளுவராண்டு 2037
கார்த்திகை - நவம்பர் 2006

# மக்கள் சிந்தனை

தமிழ் சமுதாய இலக்கிய திங்களிதழ்



## இமத்துவப் பெருவிழா!

13-11-2006




சிறப்பாசிரியர் : தவத்திரு குன்றக்குடி பொன்னம்பல அடிகளார்

# மக்கள் சிந்தனை

சமய சமுதாய இலக்கிய திங்களிதழ்

## விளம்பரக் கட்டணம்

| விவரம் | அளவு | 1 வெளியீடு | 12 வெளியீடு |
|---|---|---|---|
| பின் அட்டை வெளிப்புறம் | 1 பக்கம் | ரூ. 750 | ரூ. 7500 |
| அட்டை உட்புறம் | 1 பக்கம் | ரூ. 650 | ரூ. 6500 |
| இதழ் உட்புறம் | 1 பக்கம் | ரூ. 500 | ரூ. 5000 |
| இதழ் உட்புறம் | 1/2 பக்கம் | ரூ. 350 | ரூ. 3500 |

## சந்தா விவரம்

| | |
|---|---|
| தனி இதழ் | ரூ. 5-00 |
| ஆண்டுச் சந்தா | ரூ. 60-00 |
| ஆயுட் சந்தா | ரூ. 600-00 |
| புரவலர் கட்டணம் | ரூ. 1000-00 |

சந்தா - விளம்பரம் அனுப்பவேண்டிய முகவரி :

*நிர்வாகி,*

**மக்கள் சிந்தனை**

குன்றக்குடி - 630 206

தொலைபேசி எண். 04577 - 264227

ஆசிரியர்

**மரு. பரமகுரு**

அச்சிட்டு வெளியிடுவோர் :

சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி.

# மக்கள் சிந்தனை

நிறுவனர் : தவத்திரு குன்றக்குடி அடிகளார்

திருவள்ளுவராண்டு 2037 (விய) மாதம் : கார்த்திகை

மலர் : 20 இதழ் : 11




# சமூகநீதிப் பயணம்

தமிழகத்தின் தலைநகரில் சமத்துவப் பெருவிழா. ஒட்டு மொத்தத் தமிழகத்தையும் சமத்துவபுரமாக உயர்த்தும் உயரிய இலட்சியத்தில் இரவு பகலாக உழைக்கும் "முத்தமிழறிஞர்" முதல்வர். கலைஞர் தலைமையில் சமத்துவப் பெருவிழா! எதற்கு இந்தச் சமத்துவப் பெருவிழா? பல ஆண்டுகளாகத் தனித் தொகுதியாய் அறிவிக்கப்பட்ட பாப்பாபட்டி, கீரிப்பட்டி, நாட்டார்மங்கலம், கொட்டக்காச்சியேந்தல் ஆகிய ஊராட்சிகளில் தேர்தல் நடைபெற முடியாமல் இருந்த நிலையை மாற்றி அமைதியான முறையில் சனநாயக வழியில் தேர்தல் வெற்றிகரமாக நடைபெற்று அவற்றின் ஊராட்சித் தலைவர்கள் தங்கள் பணியைச் சிறப்பாகத் தொடங்கி உள்ளார்கள். ஏறத்தாழ பத்து ஆண்டு காலமாக இந்தியாவின் குடியாட்சித் தத்துவத்திற்கு, மனித உரிமைக்கு அறைகூவலாக இருந்த அவலநிலை மாறியுள்ளது.

சமத்துவப் பெருவிழா நாயகராய் வீற்றிருந்த "முத்தமிழறிஞர்" கலைஞர் அவர்களை, விடுதலைச் சிறுத்தைகள் அமைப்பின் தலைவர். தொல். திருமாவளவன் அவர்கள் "சமத்துவப் பெரியார்" என்று போற்றிப் பாராட்டினார்!

தொல். திருமாவளவன் அவர்கள் கலைஞரைப் பாராட்டிச் சொன்ன வார்த்தைகள் முற்றிலும் பொருத்தமானவைதான்.

பாப்பாபட்டி, கீரிப்பட்டி, நாட்டார்மங்கலம், கொட்டக்காச்சியேந்தல் ஆகிய ஊராட்சிகளின் தேர்தல் பிரச்சனை குறித்து தேசியப் பொது விசாரணை ஜூன் 14, 2006 அன்று மதுரையில் நடைபெற்றது. உச்சநீதிமன்ற முன்னாள் நீதியரசர் திரு. எஸ். இராமசாமி, சென்னை உயர்நீதிமன்ற முன்னாள் நீதியரசர் திரு. எம்.எஸ். ஜனார்த்தனன், தேசிய பெண்கள் ஆணைய முன்னாள் தலைவர் முனைவர். மோகினி கிரி, காந்திகிராம கிராமிய பல்கலைக்கழக முன்னாள் துணைவேந்தர் முனைவர். மார்க்கண்டன் ஆகியோர் அடங்கிய குழு அளித்த தேசியப் பொது விசாரணை அறிக்கை, மேற்படி நான்கு ஊராட்சிகளில் தேர்தல் நடைபெறாத நிலைப்பாட்டினை மிகக் கடுமையாய்ச் சுட்டிக்காட்டியது.

நடுவர் குழு, அரசு நிர்வாக இயந்திரம் தேர்தல் அமைதியாக நடைபெற்று தனித் தொகுதிகளில் ஊராட்சித் தலைவர்கள் பணியாற்றும் சூழலை ஏற்படுத்த வேண்டும். தேர்தலில் தேர்ந்தெடுக்கப்பட்ட தலித் வேட்பாளர் சட்டம் வரையறை செய்துள்ள பத்து வருடங்களுக்கு முழுமையாக ஆட்சி புரியாத வரையில் சுழற்சி முறையில் இந்த ஊராட்சிகளைப் பொதுத் தொகுதியாக மாற்றக்கூடாது என்று பரிந்துரைத்துள்ளது.

குடியரசுத் தலைவராய் மனித உரிமை மறுக்கப்பட்ட நம் சகோதரரை (தலித்) ஏற்கின்ற நாம் உள்ளூர் ஊராட்சித் தலைவராக ஏற்க மறுப்பது ஏன்? காலம் காலமாய் நம் மனித மனங்களில் ஆழமாய் விதைக்கப்பட்ட தீண்டாமை என்னும் நச்சு விதையின்

மூலம் அழிக்கப்படவேண்டும். தம்மைப் போலவே அறிவு, ஆற்றல், ஆளுமை நிரம்பியவரை சக மனிதராய் எண்ணிப் பார்க்காத அவலநிலை மாற்றப்படவேண்டும். தீண்டாமைக்கு எதிராகச் சட்டங்கள் பணி செய்வதை விட சமூக மாற்றங்களை விதைக்கும் கருத்துச் சலவை செய்யப்படவேண்டும். தீண்டாமை மனித உரிமைக்கு எதிரானது என்பதை ஊடகங்கள், நூல்கள், செய்தித்தாள்கள் வாயிலாகக் கருத்து மாற்றத்தை ஏற்படுத்த வேண்டும். சட்டங்கள் வழி மாற்றங்கள் ஏற்படுவதை விட, கருத்துக்கள் வழி மனமாற்றத்தை ஏற்படுத்துவது நிரந்தரத் தீர்வாகும்.

ஜனநாயகத்தில் முழுமையாய் நம்பிக்கை வைத்து ஏற்றிருக்கும் பாப்பாபட்டி, கீரிப்பட்டி, நாட்டார்மங்கலம், கொட்டக்காச்சியேந்தல் ஆகிய கிராமங்களின் ஒட்டுமொத்த மக்களுக்கும் ஒருசேர நன்றி தெரிவிக்கின்றோம். தேர்ந்தெடுக்கப்பட்ட ஊராட்சிகளில் ஐந்து ஆண்டுகள் அமைதியாய் நிலையான நல்லாட்சி நடப்பதே இந்தக் கிராமங்களின் அனைத்து பொதுமக்களுக்கும் கிடைத்திட்ட ஒட்டுமொத்த வெற்றியாகும்.

பெரியாரின் குருகுலத்தில் பயின்று, பேரறிஞரின் பாசறையில் வளர்ந்து, மனிதகுல சமத்துவத்திற்கும், சமூக நீதிக்கும் அறுபது ஆண்டிற்கும் மேலாகப் போராட்டம் நிறைந்த பொதுவாழ்வைச் சந்தித்து, தமது எழுத்துக்களையும், செங்கோலையும் மனித குல சமத்துவத்தினை நிலைநாட்ட அர்ப்பணித்த சமத்துவப் பெரியார் முத்தமிழறிஞர் மாண்புமிகு முதல்வர் டாக்டர். கலைஞர் அவர்களின் சமூக நீதிப் பயணததிற்கு கிடைத்திட்ட மகத்தான வெற்றியாகும்.

(சென்ற இதழ்த் தொடர்ச்சி)

# திருக்குறள் உரை

**(தவத்திரு குன்றக்குடி அடிகளார்)**

## 69. தூது

இருவருக்கிடையே நட்பை ஏற்படுத்தி வளர்க்கும் பணியில் ஈடுபடுதல், பழகியவர்களிடையே பிணக்குகள் ஏற்பட்டால் இடையில் இருந்து பேசி இணக்கம் ஏற்படுத்துதல், பகைமை கொண்டவர்களுக் கிடையில் பேசிச் சமாதானம் செய்து வைத்தல், கூட்டின் காரணமாக வலிமைகூடிப் போர் விளைவிப்போரை ஒருவரிடமிருந்து பிரித்தல் முதலியன தூதுவரின் கடமைகள். இத்தகைய தூது பண்டு அரசுகளுக்கிடையில் மட்டுமே நிகழ்ந்ததால் அரசியல் சார்பான பணி, தூது என்று கருதப்பெற்றது. குடும்ப வாழ்க்கையிலும் சமூக வாழ்க்கையிலும் கூடத் தூது தவிர்க்க இயலாதது.

பெரிய புராணத்தில் சிவபெருமான் பரவையாரிடம் சுந்தரருக்காகத் தூது சென்றமையை அறிக.

தமிழர்தம் ஆட்சி அமைப்பில் அமைந்த ஐம்பெருங்குழுவில் "தூதுவர் ஓர் உறுப்பினர்" என்ற உண்மை அறியத்தக்கது.

*அன்புடைமை ஆன்ற குடிப்பிறத்தல் வேந்தவாம்*
*பண்புடைமை தூதுஉரைப்பான் பண்பு.* (681)

அன்புடையாராக இருத்தலும் வளர்ந்த குடிமரபில் பிறந்தமையிலாகிய பின்னணியும் அரசர் விரும்பும் பண்புகளை உடையராயிருத்தலும் தூதுவர்களின் பன்பாக இருத்தல் வேண்டும்.

தூது செல்லும் இடத்தில் வெறுப்பன பேசுதலும் உடன்படா மனப்போக்கும் நிகழலாம். அப்போதும் நிலை தடுமாறாமல் நெறிதவறிப் பேசுவோரிடமும், செய்வோரிடமும் அன்புடையராகப் பழகி இணக்கம் காணவேண்டும் என்பதால் அன்புடைமை முதலில் கூறினார்.

வளர்ந்த குடியில் பிறந்திருந்தால் தலைமுறை வழி நற்பண்புகள் அமைந்திருக்கும் என்ற நம்பிக்கையிலும் முன்னோர்-பெற்றோர் இருந்த பெருஞ்சிறப்பு வழி காட்டப்பெறும் பெருமை, ஒரோவழி

பின்தோன்றியவர்களிடமும் காட்டப்பெறும் என்பதாலும் "ஆன்ற குடிப்பிறத்தல்" என்று கூறினார்.

யார் ஒருவரும் அவாவிப் பழகும் பண்புகளைப் பெற்றாலே எடுத்த காரியம் முடியும் என்பதால் "வேந்தவாம் பண்பு" என்றார்.

*அன்புஅறிவு ஆராய்ந்த சொல்வன்மை தூதுஉரைப்பார்க்கு*
*இன்றி அமையாத மூன்று.* (682)

அன்பும் அறனும் ஆராய்ந்து கண்டு சொற்களைச் சொல்லும் வன்மையும் தூது உரைப்பார்க்கு இன்றியமையாத மூன்று.

"அன்பு" - தூது அனுப்பும் அரசன் மாட்டு என்று கூறுவர். தவறில்லையானாலும் தூதுரைக்கும் அரசனிடத்து அன்பு என்பதே சிறந்த பொருள்.

*நூலாருள் நூல்வல்லன் ஆகுதல் வேலாருள்*
*வென்றி வினையுரைப்பான் பண்பு.* (683)

நூல் பல கற்றுத் தெளிந்த அறிவைப் பெறுதல், வேல் தங்கிய வேந்தரிடம் தூது செல்வோருக்குத் தேவையான பண்பு.

வேற்றரசனும் அந்த அரசனின் அவை அமைச்சர்களும் தொடுக்கும் வினாக்களுக்கு விடை சொல்லப் பல நூல் பயிற்சி தேவை என்றார்.

*அறிவுஉரு ஆராய்ந்த கல்விஇம் மூன்றன்*
*செறிவுடையான் செல்க வினைக்கு.* (684)

இயற்கையாயமைந்த அறிவும், கவர்ச்சி மிக்க உருவமும், ஆராய்ந்தறிந்த கல்வியும் வளமாகப் பெற்றவர்களே தூது செல்லுதல் வேண்டும்.

"ஆராய்ந்தறிந்த கல்வி" கற்கும் கல்வியை ஆராய்ந்து தெளிந்து துணிதல்.

ஆராய்ச்சி இல்லாத கல்வி, ஏட்டுக் கல்வி, எத்துணையும் பயன் தராது.

*தொகச் சொல்லித் தூவாத நீக்கி நகச்சொல்லி*
*நன்றி பயப்பதாம் தூது.* (685)

விரிவாக இல்லாமல் தொகுத்துச் சொல்லியும், தகாதனவற்றை நேரிடையாகச் சொல்லாமல் ஒதுக்கி மகிழ்ச்சி தரும் வகையில் சொல்லியும் நன்மை செய்வதே தூது.

காலக்கேட்டைத் தவிர்க்க "தொகுத்துச் சொல்லி" என்றார். எந்த ஒன்றை விரித்துச் சொன்னாலும் வழுக்கள் ஏற்படும். அதைத் தவிர்க்கவும், "தொகுத்துக்கூறுதல்" என்றார்.

கோபம் வரக்கூடிய செய்திகளை அப்படியே எதிர்மறையாகச் சொல்லாமல் நலம் பயக்கும் வழிவகை கண்டு மகிழ்ச்சி பொங்கச் சொல்லுதல் தூது.

*கற்றுக்கண் அஞ்சான் செலச்சொல்லி காலத்தால்*
*தக்கது அறிவதாம் தூது.* (686)

நீதி நூல்களைக் கற்றுத் தெளிந்தவனும் தூது சென்ற அரசனின் வெகுளிக்கு அஞ்சாதவனும் தூதுரைக்கும் காலத்தில் சூழலையறிந்து தூதினை முடிக்குந் திறனுடையவனுமே தூதுவன்.

*கடன்அறிந்து காலம் கருதி இடனறிந்து*
*எண்ணி உரைப்பான் தலை.* (687)

தமது கடமையை அறிந்து, (அந்தக்கடமையை) நிறைவேற்றுவதற்குரிய வகையில் காலத்தையும் இடத்தையும் அறிந்து அவற்றிற்கேற்றாற்போல எண்ணிச் சொல்லுபவன் தலைசிறந்த தூதுவன்.

செய்ய வேண்டிய கடமையைக் "கடன்" என்றார். உரிய தகுதி நலன்களையும் பெறுவதால் "கடன்"ஆயிற்று.

கடமை உணர்ந்தவர்கள் காரியம் நிறைவேறத் தக்க வகையில் எண்ணிச் செய்வர். கடமையை உணராதவர்கள் "ஏனோதானோ" என்று செய்வர். எதிர் விளைவு வாராமலும் உடன்பாட்டு விளைவு உருவாகத் தக்க வகையிலும் எண்ணிச் செய்தல் வேண்டும் என்பதனால் "காலமும் இடமும்" குறிப்பிட்டார்.

*தூய்மை துணைமை துணிவுடைமை இம்மூன்றின்*
*வாய்மை வழியுரைப்பான் பண்பு.* (688)

தூய்மையுடைமையும், துணையாக அமையும் இயல்பும் துணிவுடைமையும் உண்மை கூறுவோரின் இயல்பு.

தூய்மையாவது ஆசைக்காட்படாதிருத்தல், யாரிடம் வாய்மை கூறப்படுகிறதோ அவர் வாய்மை கூறுவோரைத் தமது துணை என்று எடுத்துக்கொள்ளாவிடில் சொல்லும் வாய்மை எடுபடாது. ஆதலால் துணைமை வேண்டும்.

*விடுமாற்றம் வேந்தர்க்கு உரைப்பான் வடுமாற்றம்*
*வாய்சோரா வன்க ணவன்.* (689)

தனது அரசன் சொன்னவைகளைச் சொன்னபடி, மாற்றரசர்க்குச் சொல்லாதவன் தூதுவன்.

தனது அரசன் சோர்ந்தும் வெகுண்டும் சில சொல்லியிருக்கலாம். அந்தச் சொற்களை அப்படியே சோர்ந்து சொல்லுவது தூதுவனுக்கு ஆகாது.

*இறுதி பயப்பினும் எஞ்சாது இறைவற்கு*
*உறுதி பயப்பதாம் தூது.* (690)

தமது வாழ்க்கைக்கு முடிவே வருவதாய் இருந்தாலும் அதற்காக அஞ்சாது தனது அரசருக்கு உறுதி பயப்பவைகளைச் செய்பவனே தூதுவன். *(தொடரும்)*



**கோள் சொல்பவர்களை ஒழிக்க வேண்டுமானால் அவர்களைத் திருத்த முயல்வது பயன் தராது; திருத்தவும் முடியாது. கோள் கேட்பவர்கள் தாம் திருந்த வேண்டும். கோளினைக் கேட்பவர்கள் இல்லாது போனால் கோள் சொல்பவர்கள் ஏது?**

**–அருள்நெறித்தந்தை**

## அன்பான வேண்டுகோள்!

*சமுதாய மாமுனிவராகத் திகழ்ந்த நமது அருள்நெறித் தந்தை தவத்திரு குன்றக்குடி அடிகளார் அவர்களின் ஆழமான சிந்தனைகளை அடியொற்றி நடைபோடும் "மக்கள் சிந்தனை" மாத இதழ் மேலும் பலம் பெறுவதற்குத் தங்களின் ஆதரவு தேவை. நமது கருத்து பரவலாக மக்களைச் சென்றடைய இதழ் அவசியம்.*

*ஆயுள் சந்தாவாகவோ, ஆண்டுச் சந்தாவாகவோ புரவலர் தொகையாகவோ மக்கள் சிந்தனை இதழுக்கு வழங்கி மக்களின் சிந்தனைகளை அகம்கொண்டு வெளிவர உதவுங்கள். "மக்கள் சிந்தனை"யின் பணி சிறப்புடன் தொடர வாசகராக, படைப்பாளராக சந்தாதாரராக விளம்பரதாரராக மாறுங்கள்; இன்றே சமய சமுதாயப் பணியை வலிமைப்படுத்துங்கள்.*

*- ஆசிரியர்*

# திருநாவுக்கரசர் திருவாக்கில் பழமொழிகள்

(தா. குருசாமி தேசிகர், மதுரை)

ஒரு நாட்டின் அறிவுத் திறம், அவ்வறிவுத்திறத்தின் வழி, பிறந்த நகைச்சுவை இன்பம், வீரம் ஆகிய அவ்வந் நாட்டின் பழமொழிகளில் இருந்து கண்டுபிடிக்க முடியும் (The genius, wit and sprit of a nation core Discovered in the proverbs) - என்று பேகன் (BACON) சிந்தித்துள்ளார். நீண்ட நெடிய இலக்கியப் படைப்புமிக்க தமிழ் நூல்களில் அமைந்துள்ள பழமொழிகள் தனிச்சிறப்புடையவை ஆகும்.

## பழமொழி

ஒழுக்கம் "வழக்க"மாகி "வழக்கு"ஆவதுபோல், பழகிய செயல்திறன் "பழமொழி" ஆகும் என்பர். தொல்காப்பிய நூலில் "முதுசொல்" என்பது பழமொழியைக் குறிக்கும் என உரையாளரும் உரைத்துள்ளனர். இதுபற்றிய நூற்பாவும் படிக்கத்தக்கதாகும்.

*"நுண்மையும் சுருக்கமும் ஒளியுடைமையும்*
*எண்மையும் என்றிவை விளங்கத் தோன்றிக்*
*குறித்த பொருளை முடித்தற்கு வருஉம்*
*ஏது நுதலிய முதுமொழி என்ப"-* இச்சூத்திரம்

"பழமொழி" என்பது கூரிய நுட்பதிட்பம் உடையதாயும், சுருக்கத்தில் பொருட்பெருக்கம் உடையதாயும், விழுமியதாகவும், குறித்த பொருளை முடித்துச் சிந்தனை வழங்குவதாகவும் அமைந்திருக்க வேண்டும் - என்ற கருத்தமைவில் இலக்கணம் பிறந்திருக்க வேண்டுமாயின், பழமொழி அமைந்த பண்டை இலக்கிய வளத்தை ஓரளவு அளந்தறியலாம்.

## குறுந்தொகையில் பழமொழி

"அளவுமிஞ்சின் அமுதமும் நஞ்சு" - "பழகப்பழக பாலும் புளிக்கும்" என்ற பழமொழிகள்

*"நீர் நீடாடிற் கண்ணுஞ்சிவக்கும்*
*ஆர்ந்தோர் வாயில் தேனும் புளிக்கும்*
*தணந்தினை யாயின் எம்இல் உய்த்துக் கொடுமோ"*

என்ற பாடலில் அமைந்துள்ளன. பழமொழி பழக்க மிகுதியாலே ஏற்படும் வெறுப்புடைப் பொருளான "சம்பவம்" விளக்கப்படுகிறது. சங்க இலக்கியப்பழமொழிகளுக்கு இது ஓர் எடுத்துக் காட்டு. "பழமொழி நானூறு" கீழ்க்கணக்கில் ஒரு நூல். ஒவ்வொரு வெண்பாவிலும் கருத்தும், ஒரு பழமொழியும் அமைந்த தனிச்சிறப்புடைய இந்நூல் ஓதித் தெரிய வேண்டியதாகும். ஆசிரியர் முன்றுறையரையனார் என்பர்.

ஓர் எடுத்துக்காட்டு

*"நாயைக் கண்டால் கல்லைக் காணோம்*
*கல்லைக் கண்டால் நாயைக் காணோம்"*

என்ற பழமொழியில் நல்லறம் செய்வதில், காலம்பார்க்கக் கூடா என்பதும், பின்னால் செய்வோம் என்று நினைந்தால் நோய் - மூப்பு இவற்றால் தடை நிகழும் என்பதை உணர்த்தவும் நாயும் கல்லும் பயன்படும் திறத்தை பழமொழி நானூற்றில்,

*"மாய்வதன் முன்னே வகைப்பட்ட நல்வினையை*
*ஆய்வின்றிச் செய்யாதார் பின்னை வழிநினைந்து*
*நோய்காண்பொழுதின் அறஞ்செய்வார்க் காணாமை*
*நாய்காணின் கற்காணாவாறு"*

- என்று கருத்து விளக்கமாகி வருகிறது. இப்பாடலில் அமைந்த கருத்து, இளமைக் காலத்திலேயே வாய்ப்பான நேரத்தில் தருமம் செய்க என்பதும் தவறினால் மூப்பும் நோயும் தடையாக வந்து நிற்கும் என்பதும் கூறிப் போந்த உண்மையாகும்.

திருநாவுக்கரசரின் பழமொழிகள்

"திருமுறைகளில் பழமொழிகள்" என்ற தலைப்பில் ஒரு நூலே ஆக்கலாம். இங்கு திருநாவுக்கரசரின் அருளிச் செயல் மட்டும் ஒரு பதிகத்தில் அமைந்த பழமொழிகள் சிந்திக்கப்படுகின்றன. தவக் குறைவினால் சமண் புகுந்து மீண்ட செய்திகளை அவரே பழமொழிகளைக் கொண்டு விளக்கம் செய்கிறார். அப்பதிகம் திருவாரூரில் அருளிச்செய்தது. ஆன்றோர் அதனைப் "பழமொழித் தேவாரம்" என்று வழங்குவர்.

இப்பதிகத்தில் வந்துள்ள பழமொழிகள் :

- "கனியிருக்கக் காய்கவர்ந்த கள்வன்"
- "முயல்விட்டுக் காக்கைபின் போனவர்றே"
- "அறம் இருக்க மறம் விலைக்குக் கொண்டன்றே"
- "பனிநீரால் பாவை செயப் பாவித்தேன்"
- "என்னாகத் திருத்தாதே ஏதன்போர்க்கு
ஆதனாய் அகப்பட்டேன்"
- "இருட்டறையில் மலடு கறந்து எய்த்தவாறே"
- "விளக்கிருக்க மின்மினித் தீய்க்காய்ந்தவாறே"
- "பாழூரில் பயிக்கம்புக்கு எய்த்த வாறே"
- "தவமிருக்க அவம் செய்து தருக்கினேன்"
- "கரும்பிருக்க இரும்புகடித்து எய்த்தவாறே" - என்பன

பழமொழிகள் விளக்கம்

- "இனிய உளவாக" என்ற குறளின் "கனியிருப்பக் காய்கவர்ந்தற்று" என்ற வரி, முதற்பாடலில், ஆரூரரைத் தொழுது வாழாமல் சென்றது கனியைக் கவரமுடியாமல் காயைக் கவர்ந்ததுபோல் ஆயிற்று என முன்னோர் மொழிபொருளை உணர்ந்து கற்ற பாங்கு அறியப்படும். இது குறட்பழமொழி.
- "முயல் பின் போதல் எளிது; காக்கைபின் போதல் அரிது". அது பறந்துவிடும். முயல் சைவத்துக்கு. காக்கை சமணத்துக்கு. அருள்வழிச் செல்லாது மருள்வழிச் செலவுக்கு உவமை என்பர் தருமையாதீன உரையாளர்.
- விலை கொடுத்துப் பெறவேண்டிய நன்மையாம் அறத்தை விட்டு, வெறுத்தற்குரிய மறத்தை (ப்பாவத்தை) விலை கொண்டு வந்ததைப் போன்றது என்பதாம். இதுவும் குறட் கருத்தாம். கொடுத்தும் கொள வேண்டும் என்பது.
- பனிக்கட்டி கொண்டு பொம்மை செய்ய முயன்றது போலாம். இதனை பொய்மைசெய்ய கருதுதல் என்பர். இது புதிய பழமொழி.
- என் உள்ளத்தில் இறைவனை இருத்தாமல், சான்றோர் வாய்க்கு குருடனாய் வந்தும் வாய்த்தேன் - என்பதாம்.

- ஞானியர் கூட்டுறவு இல்லாமல் "ஈனஞாலி"யரோடு கூடிய அப்பரின் முன்னைச் செயல் இருளில் மலடான பசுவினிடத்துப் பால் கறந்து இளைத்தது போலாம் என்பது விளக்கம் பெறுகிறது.

- அறிவிலியாகிய யான் "விளக்கு" இருக்கவும் அதுகொண்டு தீ வளர்த்துக் குளிர்காயும் அறிவின்றி, மின்மினியால் தீக்காய்வதற்கு முயன்றது போலாயிற்று என்பதாம். அரிய இலக்கியச் சிந்தனையாம் இது.

- பாழாய்ப்போன ஊரில் பிச்சை புகுந்து இளைத்ததுபோல என்பது பழமொழி. இப்பழமொழியில் பாழும்ஊர் சமண சமயமாகக் காட்டுவது உணரத்தக்கது.

- இறைவனைச் சாராமல் கழிந்தமைக்குத்தவம் இருக்க அவம் செய்து தருக்கினேன் என்று அப்பரடிகள் "தவம் செய்வார் தங் கருமம் செய்வார்" என்ற குறளுக்கு "அவம் செய்தார்" இலக்கியமானதை விளக்கும்.

- ஆரூர்ப் பெருமானைக் கருதாமல் வாழ்வு நடத்தியதைக் கரும்பு இருக்க இரும்பு கடித்து இளைத்ததாகப் பழமொழி அமைத்துப் பாங்குடன் விளக்குந்திறன் பல்கலைச் செல்வரான நாவரசர்க்கே அமையும். சில பழமொழிகளைப் படைத்தும் வழங்கியுள்ளதைக் காணும் நாம் அப்பரடிகளின் கல்வி வளத்தை ஓரளவு அளந்து அறியலாம்.

## நிறைவுரை

"சிவத்தியானம் அல்லாதன எல்லாம் அவத்தியானமே" என்பார் "கரும்பிருக்க இரும்பு கடித்து எய்த்தவாறே" என்றருளினார் என்பர் தருமையாதீன உரைகாரர். உமாபதிசிவம் "தொன்மையவாம் எனும் எவையும் நன்றாகா; இன்று தோன்றிய் நூல் எவையும் தீதாகா" என்று அறிவுறுத்திய கருத்தின்படி, அப்பர் அருந்தமிழ் பழமையானது தான் என்றாலும், இன்றைய படைப்பிலக்கியத்துக்கும் அது முன்னோடியாக உள்ளது என்பதற்கு அவரது பழமொழித் தேவாரம் பத்துப் பாடல்களும் தமிழ்க் கலைக்களஞ்சியமாக உள்ளது. அதனை ஓதி உணர்வோமாக.

"*கம்பன் என்றொரு மானிடன்*" - தொடர்
அடுத்த இதழில் தொடரும்.

# சிக்-குன் குனியா வராமல் தடுக்கும் காலத்தை வென்ற

# நில வேம்புக் குடிநீர்

சுனாமி போன்று கடந்த நான்கு மாதங்களில் தமிழகம் முழுவதும் பட்டி தொட்டிகள் எல்லாம் பிரபலமாகிவிட்டது சிக்குன் குனியா காய்ச்சல்.

ஏடீஸ் எஜிப்டை என்ற பகல் நேரக் கொசு கடிப்பதால் நோயாளியை முடக்கிவிடும் சிக்குன் குனியா காய்ச்சல் ஏற்படுகிறது. இதே கொசு காரணமாக டெங்கு காய்ச்சலும் பரவுகிறது.

தமிழகத்தில் சிக்குன் குனியா காய்ச்சலுக்கு அரசின் புள்ளி விவரப்படி இதுவரை 63 ஆயிரம் பேர் பாதிக்கப்பட்டுள்ளனர். கேரள மாநிலத்தில் சிக்குன் குனியா காய்ச்சலுக்கு இதுவரை 93 பேர் உயிரிழந்துள்ளனர். தில்லியைப் போன்று தமிழகத்திலும் டெங்கு காய்ச்சலால் ஆங்காங்கே சிலர் பாதிப்புக்குள்ளாகியுள்ளனர்.

ஆக, ஒரே கல்லில் இரண்டு மாங்காய் என்ற அடிப்படையில் சிக்குன் குனியா - டெங்கு காய்ச்சலுக்குக் காரணமான ஏடீஸ் எஜிப்டை கொசுவை அழிக்க தீவிர முயற்சிகளைத் தமிழக அரசு எடுத்து வருகிறது.

### வித்தியாசமான அறிகுறிகள்

ஒரே வகைக் கொசு காரணமாக சிக்குன் குனியா, டெங்கு காய்ச்சல் ஏற்பட்டாலும்கூட, இரண்டு காய்ச்சலுக்குமான அறிகுறிகள் வித்தியாசமானவை. சிக்குன் குனியா காய்ச்சல் ஏற்படும் நிலையில் 2 முதல் 3 நாட்கள் வரை காய்ச்சல், தலைவலி, விரல் மூட்டுகள் உள்பட கைகால் மூட்டுகளில் வலி மற்றும் வீக்கம் ஏற்படும்.

### டெங்கு காய்ச்சல் அறிகுறிகள்

இரண்டு முதல் ஏழு நாள்கள் வரை காய்ச்சல், கண்களின் பின்புறம் வலி, உடல் வலி, தோலில் தடிப்புகள் ஆகியவை டெங்கு காய்ச்சலின் ஆரம்ப அறிகுறிகளாகும். காய்ச்சல் குறைந்த பிறகு கடுமையான வயிற்று வலி, தோல்-மூக்கு - பல் ஈறுகளில் ரத்தக்கசிவு, கருப்பு நிறத்தில் மலம் வெளியேறுதல், அதிகமாக வியர்த்தல் மற்றும் உடல் குளிர்ந்து போகுதல் ஆகியவை இருந்தால் நோயாளியை உடனடியாக மருத்துவமனைக்கு அழைத்துச் செல்ல வேண்டும்.

## கைகொடுக்கும் சித்தம்

சிக்குன் குனியா காய்ச்சலைக் குணப்படுத்த அலோபதி மருத்துவத்தில் நேரடி மருந்துகள் எதுவும் கிடையாது என டாக்டர்கள் தெரிவித்தனர். அறிகுறிகளைக் கொண்டே நோய்த்தொற்றைக் கட்டுப்படுத்தும் அலோபதி மருந்துகள் அளிக்கப்படுகின்றன. மாத்திரைகளைச் சாப்பிட்டு நோயாளி அதிக அளவுக்குத் தண்ணீர் குடித்து முழுமையாக ஓய்வு எடுப்பதே சிகிச்சை என்றும் டாக்டர்கள் தெரிவித்தனர்.

சித்த மருத்துவ முறையில் நோய் எதிர்ப்பு ஆற்றலை அளிக்கக் கூடிய நிரூபிக்கப்பட்ட நிலவேம்புக் குடிநீர், பிரம்மானந்த பைரவம் (மாத்திரை), அமுக்கரா சூரணம் (தூள்), மூட்டுகள் வீங்கும் நிலையில் தடவி நிவாரணம் பெற கற்பூராதி தைலம் அல்லது பிண்டத்தைலம் ஆகியவை சிக்குன்குனியா காய்ச்சலால் பாதிக்கப்பட்டோருக்கு அளிக்கப்படுகின்றன. குறிப்பாக குறைந்த செலவிலான இந்த சித்த மருந்துகள் இக்கொடிய காய்ச்சலுக்கு நல்ல சிகிச்சையைத் தருகிறது.

### மருந்துகளை எப்படிச் சாப்பிடுவது?

### 1. நில வேம்புக் குடிநீர்

இது துகள்களாகத் தரப்படும், ஒரு டீஸ்பூன் துகள் எடுத்து, ஒரு டம்ளர் தண்ணீர் விட்டு 10 நிமிஷம் காய்ச்சி கஷாயம் தயாரித்துக் கொள்ள வேண்டும். சிக்குன் குனியா காய்ச்சல் பாதிப்புக்குள்ளானவர் காலையில் வெறும் வயிற்றில் கால் டம்ளரும், இரவு சாப்பிடுவதற்கு முன்பு கால் டம்ளரும் தொடர்ந்து ஒரு வாரத்துக்குச் சாப்பிட வேண்டும். ஒவ்வொரு வேளையும் புதிதாகக் கஷாயம் தயாரிப்பது அவசியம். இது உடலுக்கு நோய் எதிர்ப்பாற்றலை அளிக்கும். உடல் வலி நீங்கும்.

### 2. பிரம்மானந்த பைரவம்

இது மாத்திரையாகத் தரப்படும். இந்த மாத்திரையைப் பொடியாக்கி தேனில் குழைத்து, உணவுக்குப் பிறகு காலை இரண்டு, இரவில் இரண்டு என தினமும் ஒரு வாரத்துக்குச் சாப்பிட வேண்டும். இது காய்ச்சலைக் கட்டுப்படுத்தும்.

### 3. அமுக்கரா சூரணம் (தூள்)

இதை உணவுக்குப் பிறகு காலை ஒரு டீஸ்பூன், இரவில் ஒரு டீஸ்பூன் என ஒரு வாரத்துக்குச் சாப்பிட வேண்டும். இதையும் தேனில் குழைத்தோ அல்லது பாலில் கலந்தோ சாப்பிடலாம். இது காய்ச்சல், வலியைக் கட்டுப்படுத்தும். நோய் எதிர்ப்பாற்றலை வளர்க்கும்.

4. கற்பூராதித் தைலம் அல்லது பிண்டத் தைலம்

சிக்குன் குனியா காய்ச்சல் காரணமாக மூட்டுகளில் வலி ஏற்படும் நிலையில் இத்தைலத்தில் (எண்ணெய்) ஏதாவது ஒன்றை வலி உள்ள இடத்தில் தடவ நிவாரணம் கிடைக்கும். வலி உள்ள இடத்தில் எண்ணெய்யை நன்றாகத் தடவி, அரை மணி நேரம் கழித்து வெந்நீர் ஒத்தடம் கொடுக்க வேண்டும்.

காய்ச்சலைத் தடுக்க

மேலே சொன்ன சித்த மருந்துகளில் உடலுக்கு நோய் எதிர்ப்பாற்றலை அளிக்கும் நிரூபிக்கப்பட்ட நில வேம்புக் குடிநீர், சிக்குன் குனியா காய்ச்சல் வராமல் தடுக்கும் சக்தி படைத்தது. அதாவது, வீட்டில் உள்ள ஒருவருக்கோ அல்லது அடுக்குமாடி குடியிருப்பில் யாருக்காவதோ அல்லது பக்கத்து வீட்டுக்காரருக்கோ சிக்குன் குனியா காய்ச்சல் வரும் நிலையில் ஆரோக்கியமாக உள்ளவர்கள் இம் மருந்தைச் சாப்பிடுவதன் மூலம் நோய் வராமல் தடுத்துக்கொள்ள முடியும்.

அதாவது, மேலே சொன்ன முறையில் நிலவேம்புக் குடிநீரை கஷாயமாக்கி காலை, மாலை என நான்கு நாள் குடிப்பது சிக்குன் குனியா வராமல் தடுத்துக்கொள் உதவும்.

(நன்றி : தினமணி)



2.10.2006 விசயதசமியன்று, நம் குன்றக்குடி ஆதீனப்புலவர் பூவாளூர் திரு. க.கதிரேசன் அவர்களுக்கு, திருப்பனந்தாளில் காசித் திருமடத்து அதிபர் கயிலை மாமுனிவர் திருவருள்திரு. முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் மாலை அணிவித்து, பொன்னாடை போர்த்தி, பொற்பதக்கம் அணிவித்துத், திருநீறு வழங்கி, "சைவத்தமிழ்மணி" என்னும் பட்டம் தந்தருளல்.

# அருளாலய ஆனந்தங்கள்

(தமிழாகரர். **தெ. முருகசாமி,** புதுச்சேரி -9)

ஆனந்தம் என்றதுமே இன்பம் என்ற
அளப்பரிய பொருள்தானும் நெஞ்சில் தோன்றும்!
ஆனந்த மயமான இன்பந் தானும்
அழிகின்ற கானல்நீர் போன்ற தன்றித்
தானந்தம் இல்லாத கடவுள் போன்ற
தனித்ததொரு பொருள்என்ற உண்மை தன்னை
வானந்த வெளியடைந்த இருவர் தம்மின்
வனப்பான வாழ்க்கையினால் உணர லாமே!

எத்தனைபேர் வனப்பாக வாழ்ந்திட் டாலும்
எடுப்பான நூற்றாண்டு விழாவைத் தானும்
அத்தனைபே ருக்கும்மாய் எடுப்ப தில்லை!
அறிவுடனே வாழ்கின்ற வாழ்க்கை தன்னில்
சத்தான சாதனையாம் சிகரந் தன்னைச்
சரியாகத் தொட்டிட்ட சான்றோர் என்னும்
முத்தான வித்தகர்க்கே நூற்றாண் டென்னும்
முழுமைவிழா எடுப்பார்கள் உலகத் தார்கள்!

அப்படியாய் நூற்றாண்டு விழாவைக் காணும்
அரிதான இருசான்றோர் உள்ளார் இங்கே!
முப்பழமாம் முத்தமிழை முருக னோடே
முக்காலும் பரப்பிட்ட பக்தி மார்க்க
ஒப்பரிய வித்தகராம் கிருபா னந்த
உயர்பெரிய வாரியாரைப் போல நாட்டில்
செப்பரிய பொதுவுடைமைச் சீவா னந்த
செகம்புகழும் சீலரென இருவர் தாமே!

பேசாத நாளெல்லாம் இல்லை என்ற
 பெருமைக்காய் மட்டுமன்றிப் பெரியதான
ஈசனுறை திருக்கோயில் பலவற்றிற்கும்
 இறைபணியாய் திருப்பணிகள் செய்த தோடு
வாசமுடன் வளர்கின்ற அரும்பைப் போன்று
 வளர்ந்தாலும் படித்துமணம் பரப்ப ஒல்லாப்
பாசமிகு பல்லாயிரக் குழந்தைக் காகப்
 பலவகையாய் உதவிசெய்தார் வாரி யாரே!

அவர்செய்த தொண்டுக்குள் மேலாய் உள்ள
 அரியதொரு தொண்டென்று சொன்னால் அந்தத்
தவமான திருப்பராய்நல் துறையில் பெற்றோர்
 தமையிழந்த பிள்ளையெலாம் கல்வி தன்னை
அவமின்றி விடுதியிலே தங்கிக் கற்க
 அந்நாளில் நாற்பதான லட்சந் தன்னைச்
சிவத்தொண்டாய் கொடுத்திட்ட ஒன்றிற் கன்றோ
 சிறப்பாகப் பெற்றிட்டார் நூற்றாண் டென்பேன்!

அவர்போலத் தென்குமரி மாவட் டத்தில்
 அழகான பூத்பாண்டி கிராமந் தன்னில்
அறிவுடனே பிறந்திட்ட சீவா தானும்
 அன்னைமொழி ஆரம்பப் பள்ளி தன்னில்
அளவாகக் கற்றிட்டே ஆசா னாகி
 அனைத்துலக அரசியலும் கற்ற தோடு,
அன்பான காந்திமகான் வழியில் சென்றே
 அளப்பரிய தேசியத்தில் இணைந்து வாழ்ந்தார்!

பெரியாரின் பகுத்தறிவைக் கொண்டிட் டாலும்
 பெரிதாக அதைப்பரப்ப முனைந்தா ரில்லை!
விரிவான பொதுவுடைமைக் கொள்கை ஒன்றே
 விறுவிறுப்பாய் பலன்கொடுக்கும் என்றே கண்டு
சரியான அப்பாதை தன்னில் தன்னைச்
 சரணாக்கிக் கொண்டதினால் சாதி பேதம்
பெரிதாகத் தென்பட்ட சமுதா யத்தில்
 பெரியதொரு ஆசிரமம் நடத்தி னாரே!

அரசியலில் அஞ்சாமை எளிமை நேர்மை
அன்பான அணுகுமுறை தூய்மை என்னும்
உரசலிலா உயர்பண்பு கொண்ட தாலே
உத்தமராம் காந்திமகான் அவரைத் தேடி
தரிசுநில ஆசிரம சிராவ யற்கே
தனியாக வந்தேதான் பார தத்தின்
பரிசான பெருஞ்சொத்து நீரே என்ற
பண்பிற்கே நூற்றாண்டைச் சீவா கொண்டார்!

இப்படியாய் இவ்விருவர் சிகரந் தொட்ட
இனிதான தொண்டாலே புகழ்கொண் டாலும்
ஒப்பில்லா வாரியாரின் நூற்றாண் டுத்தான்
ஒருவாறு முடிந்திட்ட நிலையில் அன்னார்
செப்பரிய உருவத்தை அஞ்சல் தலையாய்
செகம்புகழ ஆக்கியதைப் போல நாட்டில்
இப்பொழுது தொடங்கியுள்ள சீவா னந்தர்
இனிதான நூற்றாண்டில் வேண்டும் என்போம்!

அவ்விருவர் மனசக்தி பேச்சாய் மாறி
அகிலத்தில் சனசக்தி வளர்த்த தாலே
செவ்வியநல் தாமரைபோல் சிறந்த தான
செம்மையுறும் நல்வாழ்வு மலர, அதுதான்
கவ்வியநல் காவியுடை காரல் மாக்சாம்
கன்னித்தமிழ் அடிகளாரின் கொள்கை தன்னை
அவ்விதமாய் ஒத்திருந்த கார ணத்தால்
அருளாலய ஆனந்தம் அவரென் பேனே!

குன்றக்குடி

**அருள்தரு சண்முகநாதப் பெருமான் திருக்கோயில்**

**திருக்கார்த்திகைத் திருவிழா**

நாள் : 3.12.2006

**நிகழ்ச்சி முறை**

| | | |
|---|---|---|
| காலை 11 மணி | : | சந்தனத் திருமுழுக்காட்டு |
| மாலை மணி 6.15 மணி | : | அண்ணாமலை தீபம் |
| இரவு 8 மணி | : | அருள்தரு சண்முகநாதப்பெருமான் எழுந்தருளல் |

*குன்றக்குடி வருக!* *குமரன் அருள் பெறுக!*

# திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா - வேள்விச் சாலை - விளக்கம்

செந்தமிழ்த்திருநாடு தெய்வநலம் சிறந்தது. தமிழர் இத்தெய்வ நலத்தை நன்றாகப் புரிந்துகொண்டு அதனைத்தம் வாழ்க்கைக்குப் பெருந்துணையாகக் கொண்டவர்கள்.

*உள்ளம் பெருங்கோயில் ஊனுடம்பு ஆலயம்*
*வள்ளல் பிரானுக்கு வாய் கோபுரவாசல்*
*தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்*
*கள்ளப் புலன்ஐந்தும் காளாமணிவிளக்கே* (திருமந்திரம்)

என்ற கருத்தில் மனதை ஆழமாகப் பதித்து வாழ்பவர்கள் தமிழர்கள். மனிதர்கள் வாழும் இடமென்றால் அங்கே உயிரோட்டமுள்ள திருக்கோயில் இருக்கவேண்டும் என்பதை உறுதிசெய்து கொண்டவர்கள் தமிழர்கள். இவ்வாறு ஒரு திருக்கோயில் இல்லையென்றால் அவ்வூர் எவ்வளவு பிறவளங்கள் நிறைந்ததாக இருந்தாலும் அவ்வூரில் குடியிருக்கமாட்டார்கள். இந்த நிலையை தங்கள் முன்னோர்களின் முதியவரான திருநாவுக்கரசரின் திருமந்திரத்தை உணர்ந்த ஒரு உறுதிப்பாட்டினால் பெற்றார்கள். அது....

*"திருக்கோயில் இல்லாத திருவில் ஊரும்..*
*அவையெல்லாம் ஊரல்ல அடவிகாடே"*

என்ற திருவாக்கினால் அமைந்தது. இதன் வழிவந்ததே "கோயிலில்லா ஊரில் குடியிருக்கவேண்டாம்" என்ற அறவுரையாக ஒலித்துக் கொண்டிருக்கிறது. இந்த அடிப்படையில்தான் தமிழகம் எங்கும் திருக்கோயில்கள் பெரியபெரிய அளவில் அமைந்துள்ளன. இவற்றைத் தமிழ்மக்கள் தாம்தேடிய பொருள்களாலும், தமது உடல் உழைப்பு, உள்ளத்தின் உரம் இவைகளைக் கொண்டும் அமைத்தார்கள்.

இவர்களின் ஆர்வத்தை உணர்ந்த எல்லாம்வல்ல இறைவன் இத்திருக்கோயில்களில் எல்லா நேரங்களிலும் அருள்பொழிந்த வண்ணம் குடிகொண்டுள்ளார். எனவேதான் தமிழ்மந்திரம், இறைவனைச் சுட்டிப்பேசும் போது அவர் நமது ஆர்வத்தனம் - (ஆர்வத்தனத்தினை) செல்வம் என்று கூறியதைப் பொதிந்து வைத்து போற்றினார்கள்.

தமிழர்களோடு இவ்வளவு நெருக்கமானதும், உருகி உருகி மனப்பக்குவம் பெற்று மாநுடம் சிறக்க வழிவகுத்ததும் நம் திருக்கோயில்களே. இங்குதான் குடங்கொண்டு அடியார் குளிர்நீர் சுமந்துவந்து பொன்முடி தன்மேலாட்டும்படியாக அமர்ந்திருக்கின்றான் இதை,

*தடங்கொண்டதோர் தாமரைப் பொன்முடி தன்மேல்*
*குடங்கொண்டுஅடி யார்குளிர் நீர்சுமந்து ஆட்டப்*
*படங்கொண்டதோர் பாம்பரை ஆர்த்த பரமன்*
*இடங்கொண்டிருந்தான் தன் இடைமருது ஈதோ.*

என்று தேவாரத் திருமந்திரம் சொல்லுகிறது. இறைவன் அடியார்கள் வழிபடுவதற்காகவே பூவும் நீரும் உள்ளன என்றும் யாவர்க்குமாம் இறைவர்க்கு ஒரு பச்சிலையென்றும், "நீ நாளும் நினைகண்டாய்... பூநாளும் தலைசுமப்ப.... பெறலாமே நல்வினையே" ஆமாறு உன் திருவடிக்கே.... பூமாலை புனைந்தேத்தேன் புகழ்ந்துரையேன்"
என்றெல்லாம் திருமுறைத் தமிழ் முழங்குகின்றது. அப்போது மலர்தூவி ஆதரித்து முப்போதும் தொழுவார்க்கு சிவபெருமான் எப்போதும் இனியனாய் அருள்செய்தலினாலே அவனோடு தொடர்புடையதாக தங்களது வாழ்க்கையை அமைத்துக்கொண்டவர்கள் தமிழ்ப் பெருமக்கள். இத்தொடர்பு பற்றி எழுந்ததே வழிபாடும் அதை ஏற்றுக் கொள்ளும் சிவலிங்கத் திருமேனியும். அத்திருமேனி அமைந்துள்ள இடமே பெருங்கோயில் என்றும், அங்குள்ள இன்பப் பொருளோடு கொண்ட தொடர்பால் நின்றும், இருந்தும், நடந்தும் இன்பம் நுகரும் இடங்களெல்லாம் ஆலயம் என்றும் பெயரமைத்து மகிழ்ந்தார்கள். இதையொட்டி எழுந்ததே "ஆலயம் தொழுவது சாலவும் நன்று" என்ற வாக்காக வந்தது.

இத்தகு பெருமைகள் வாய்ந்த வழிபாட்டிற்கு குறியாய் இருந்தருளும் பெருமான் வெளிப்படுவதும் அவனுக்கு மந்திரத்தன்மை வாய்ந்த திருமுறைத்தமிழ்களை ஓதிக்கொண்டு வழிபடுவதுமே திருக்குட நன்னீராட்டுப் பெருவிழாவாக அமைகிறது.

திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா

பேரண்டம் எங்கும் நிறைந்து எல்லாமாயும் அவைகள் அல்லவுமாயும் நின்றருளும் பெருமான், வழிபடும் அடியவர்கட்கு வெளிப்படுகின்ற ஓர் அமைப்பே திருக்குட நன்னீராட்டுப் பெருவிழா. இப்பேருண்மையை மறைத்து குறிப்பிட்ட இடத்தில் குறிப்பிடும் திருவுருவத்தில் இறைவனது கலப்பே இல்லாததுபோலவும் சிற்றறிவும் சிறுதொழிலும் உடைய ஆன்மாக்களாக உள்ளவர்களில் சிலர், தங்கள் வலிமையினால் மட்டுமே ஒன்றுமில்லாத ஒரு இடத்தில் - குறியில் இறைவனை இருத்துவது முடியும் என்று கூறி உள்ளே தன்னலமும், வெளியே பொதுநலமும் கொண்ட ஒரு சிறுபிரிவினர்கள், மெய்மை அன்பும் அருள்வேட்கையும் கொண்ட நன்மக்களை ஏமாற்றி கடவுள்

அவர்களது ஏவலாளர் என்ற அளவுக்கு மதிக்குறைவு உடையவர்களாய் உள்ளவர்கள் எனவே இந்த நிலையில் தாங்களே நம்மை காக்கும் கடவுள் என்ற மயக்கம் நமக்கு உண்டாவதற்கான செயல்களைச் செய்து வருகிறார்கள்.

நம் அறிவு மயங்கும் அளவுக்கு சொற்கள், செயல்கள் இவ்விரண்டிலும் நமக்கும் ஏதும் புரியாத அமைப்பைத் தாங்கள் மறைத்து வைத்துக்கொண்டு ஏதோ மாயவித்தை காட்டுபவன் போலச் செயல்பட்டு ஒரு மக்கட் கூட்டத்தைத் தங்கட்குப் பின்னால் வைத்துக் கொண்டு செயல்படுகின்றார்கள். எவ்வளவு காலமானாலும் எவ்வளவு பொருள்களை அவர்கட்குக் கொடுத்து இழந்தாலும் நாம் நம் மனத்தை அவர்கள் வழியில் இருத்தினாலும் நாம் எதிர்பார்க்கும் திருவருளின்ப வாழ்வு நமக்கு கிடைக்கவே கிடைக்காது.

உலக வாழ்வில் ஏதோதோ துறைகளில் எல்லாம் நாம் ஏமாற்றப்படுகிறோம் என்றாலும் அங்கெல்லாம் நடக்கும் பேச்சுக்களாலும் செயல்களாலும் நம்மால் நாம் அவர்களால் ஏமாற்றப்படுகின்றோம். இழப்புகட்கு ஆளாகின்றோம் என்பதைப் புரிந்துகொள்ள முடிகிறது. இது நமக்கு மொழியாலும் செய்யும் செயல்களாலும் தானே பெறமுடிகிறது. இந்த வகையான வாய்ப்பை அடியோடு தடுத்துவிடுவதுதானே அஷ்டபந்தன மஹாகும்பாபிஷேகம் என்ற தலைப்பும் அதில் உட்கூறுகளாக அவர்கள் தரும் செயல்பாட்டிலும் அமைந்திருக்கிறது.

அவர்கள் இதற்காகக் கொடுக்கும் பொருட் பட்டியல் இருக்கிறதே அம்மம்மா நாம் இது என்ன? எதற்காக? எந்த அளவு? எந்த வகையில் பயன்படப்போகிறது என்பது எதவுமே தெரிந்துகொள்ள முடியாததாகவே. உள்ளது. அதுமட்டுமா அவர்கள் காட்டும் காட்சிகளும், செய்யும் செயல்பாடுகளும் நம்மை முழு முட்டாள்களாக்கி விடுவதோடு, பெருங்கருணையாளனாக உள்ள பெரும்பொருளை நெருங்கி நின்று நீர் சொரியவோ மலர்தூவவோ, திருவாசகம் சொல்லுவதுபோல கழுமத் தழுவி இன்புறவோ முடியாது என்றும் அப்படி ஏதாவது நடந்தால் இவ்வுலகமே நெருப்பால் எரிந்துவிடுமென்றும், நீரில் மூழ்கிவிடும் என்றும், மண்மேடாக ஆகிவிடும் என்றும் பயமுறுத்தி நடுங்கச் செய்வதையே தங்கள் வாழ்க்கைக்கு வழி என்று இன்னமும் நம்பிச் செயல்படுபவர்கள் (காரியக்கார ஆரியமந்திர வியாபாரிகள்) செய்யும் அந்தக் கும்பாபிஷேகம் நமக்கு வேண்டாமே!

இதுவரையிலும் சொல்லிய மயக்கநிலை தீர்ந்தது. தமிழனுக்கு தான் என்றும் இறைவன் ஒருவனைத் தவிர யார்க்கும், எங்கும், எந்த நிலைமையிலும் அடிமை இல்லை. இறைவன் ஒருவனே நம் வாழ்க்கைக்கு வழிகாட்டியாகவும், வழித்துணையாகவும் வாழ்க்கைப் பயணத்தின் பயனாகவும் இருக்கின்றான் என்ற தெளிவு பிறந்த நிலையில்தான் இறைவழிபாட்டில் ஒரு நடுநாயகமாக விளங்கும், திருக்குட நன்னீராட்டுப் பெருவிழாவினைப்பற்றிச் சிந்தித்து செயல்பட்டு வருகின்றான். அவனறிந்த உண்மைகளை விளக்குவதே இந்த தலைப்பின் நோக்கமாகும்.

திருக்கோயில்கள் இயல்பாகவே வழிபட்டுவருபவை என்றும், புதிதாக ஒரு கோயில் அமைத்து வழிபடுவது என்றும் இருவகை கூறுபாடுகளாக உள்ளன. இத்திருக்கோவில்களில் எதுவானாலும், திருக்குட நன்னீராட்டுவிழாவிற்கு உரியதேயாம். இயல்பாக உள்ள திருக்கோயிலாக இருந்தால் அங்குள்ள இறைவனை வேள்விச் சாலைக்கு எழுந்தருளச்செய்து விரிவான வழிபாடுகளாற்றி மீண்டும் திருக்கோயிலுள்ளே பெருமான் விளங்கி அருளுமாறு செய்வது. புதிதாக கோயில் ஒன்று அமைத்து வழிபடுவதானால், இறைவன் இந்த பேரண்டமாக விளங்குகின்ற நிலையை அறிந்து அந்த பெருநிலையை வழிபடுவதற்கேற்ற அளவினனாக இறைவனை எண்ணி திருமேனி, திருக்குடங்கள், வேள்வித்தீ என்ற மூன்றிடத்திலும் அன்பால் அழுது அரற்றி வழிபட்டு நீராட்டி மலர்சொரிந்து வழிபடுவது. இதுவே திருக்குட நன்னீராட்டுப் பெருவிழாவாகும்.

## இடம் தேர்வு செய்தல்

திருக்கோயிலுக்கானாலும், வேள்விச் சாலையாக இருந்தாலும், முதலில் ஏற்ற இடத்தைத் தேர்வு செய்ய வேண்டும். இடம் - சுனைகள், அருவிகள், ஆறுகள், குளங்கள் பெருநீர்நிலைகள் உள்ள பகுதியாகயிருக்க வேண்டும். நிலம் மேடு பள்ளங்கள் இல்லாமல் சமச்சீருடையதாக இருக்க வேண்டும். நிலம் திண்ணியதாகவும், கற்குருளைகள் போல கரடு முரடான பொருள்கள் அற்றதாகவும் சேற்றுப்பகுதி அல்லாததாகவும் வேண்டும்.

## காலத்தைத் தேர்வு செய்தல்

இந்தப்படி நிலம் அமைந்து, கிடைத்தபிறகு அந்த இடத்தில் நாண்மீன்களும், கோள்களும் நல்ல நிலையில் இருக்கும் காலத்தைத் தேர்வு செய்தல் வேண்டும். இதற்குக் காலவரம்புகள் பற்றிய நூலறிவு துணை செய்யும்.

குறித்த செயலுக்காக நிலத்தை எடுத்துக்கொள்ளும் முன் செய்யும் வழிபாடு நிலம் என்பது எல்லா வகை உயிரினங்கட்கும் பொதுவானதும் உரிமை உடையதுமாகும் எனவே இந்தப் பகுதியில் உள்ள ஐம்பெரும்பொருட்கள் (மண், நீர், தீ, காற்று, வான்) நாம் கருதும் கருத்திற்கு ஏற்றதாக வேண்டும். அங்கு நல்லனவும், அல்லனவும் கலந்திருத்தல் இயல்பு. எனவே இவற்றுள் அல்லன அகற்றி நல்லன நிலைகொள்ளச் செய்வதற்காக நிலத்தெய்வத்தை வழிபடவேண்டும். அந்த நிலத் தேவியின் ஆணைபெற்று நமக்குத் தேவையான அளவு நிலத்தை எடுத்துக்கொள்ள வேண்டும். அவ்வாறு எடுத்துக்கொண்ட நிலத்தை - திருக்கோயில் அல்லது வேள்விச்சாலை அமைப்பதற்கான வரைபடத்தை முறைப்படி வரைந்துகொள்ள வேண்டும். வரைபடம் 18 கணங்களின் அமைப்பு. இதைத் தொடர்ந்து 16 கலைகள், 14 மனுக்கள், 12 சூரியர்கள் இன்னும் சிறிய அளவுகள் ஆக வரைபடங்கள் அமைத்து, அவற்றில் நம் தேவைக்கும் செய்யும் செயலுக்கும் ஏற்றவாறு நிலத்தைப் பங்கீடு செய்துகொள்ள வேண்டும். இவற்றை படங்களாக்கி உணரலாம்.

## வேள்விச்சாலை

வேள்விச்சாலையின் மொத்தமான முழு அமைப்பும் இந்தப் பேரண்டத்தின் அமைப்பாகக் கருதவேண்டும். எனவே இப்பேரண்ட அமைப்பை நாம் அறிந்திருத்தல் வேண்டும். இதற்கு திருவாசகம் - திருவண்டப்பகுதி, கச்சியப்பசிவத்தால் செய்யப்பட்ட கந்தபுராணத்தில் உள்ள அண்டகோசபடலம் இன்னும் இவைபோன்ற பலநூல்களின் துணையை நாடி அறிந்துகொள்ளலாம். ஒருவாறு சுருக்கமாகப் பார்த்தால் இவை ஐந்து கலைகளாகக் கூறலாம். இந்தக் கலைகளையும் சேர்த்து ஆறுபெருவழிகள் (ஷட்டத்துவா) அமைகின்றன. அவை கலை - தத்துவம் (புவனம்) வாழும் இடம், எழுத்துக்கள் (வர்ணம்), சொற்கள் (பதம்) காத்தல் (மந்திரம்) ஆக வகைப்படுத்திக்கொண்டு, வேள்விச் சாலையின் அமைப்பு இப்பேரண்டமாக நின்ற முழுமுதற்பொருளாகிய இறைவனுடைய அமைப்பே என்று எண்ண முடியும். பெருமானைத் திருமுறைகள் "அண்டவாணா" என்று அழைத்து மகிழ்கின்றன. வாணன் = வாழ்நன். அதாவது அண்டமாக வாழ்கின்றான் என்றும் அதனால் இப்பேரண்டம் நிலைகுலையாமல் நிலைத்து நெறிப்பட இயங்குகிறது என்ற பேருண்மையையும் நினைக்கவேண்டும்.

பணிவுடன் ஆக்கம்
**இரா. மணிமேகலை வெங்கடேசு**

உணர்த்தியவர் :
"தமிழ்வழிபாட்டு நெறியாளர்"
"சிவாகமச் செல்வர்"
சைவத்திரு. மா. பட்டியப்பனார் ஐயா
கோவை - 10.

(செப்டம்பர் இதழ்த் தொடர்ச்சி)

# அறிவியல் உறவும் - ஆன்மீக உறவும்

(டாக்டர். **கே. பாலகிருஷ்ணன்**)

பாகம் - 6

தரிசு நில மேம்பாடு, கால்நடை வளம், வேளாண் தோட்டக்கலை சார்ந்த தொழில்கள் என்று ஒருபுறம் பார்த்தோம். மனிதன் உயிர் வாழ்வதற்கும், அன்றாடத் தேவைகளைச் சந்திப்பதற்கும் பல பொருட்கள் தேவை. மேலும் அடிகளார் அவர்கள் சில குறிப்பிட்ட தொழிலுக்காக இந்தியாவில் உள்ள சில ஆராய்ச்சி நிறுவனத்தையும் அணுகினார்கள் என்று அறிந்தோம். ஆனால் அனைத்துத் திட்டங்களுக்கும் வழிகாட்டியாகவும், செயலாக்கத்தில் பங்கு பெற்றும் உதவியது செக்ரியும் (CECRI) அதன் விஞ்ஞானிகளும் என்று நினைவு கொள்ள வேண்டும்.

செக்ரி விஞ்ஞானிகள் 1977-லிருந்து திட்டக்குழுவை நடத்தும் பொறுப்பையும், அதன் திட்டங்களுக்கு செயல் வடிவம் கொடுப்பதையும் இந்தியாவிலுள்ள ஆய்வகங்களுடன் தொடர்பு கொண்டு தொழில் நுட்பங்களைத் தேர்ந்தெடுப்பதிலும், அறிவியல் கருத்தரங்குகள் அறிவியல் கண்காட்சிகள் நடத்துவதிலும் பங்கு பெற்று அடிகளார் அவர்களுக்கு உறுதுணையாக இருந்தார்கள். இயக்குநர்கள் H.V.K. உடுப்பா, K.S. இராசகோபாலன், K.I. வாசு, S.K. இரங்கராசன், S.V. சுப்புராவ் மற்றும் M. இராகவன் அவர்கள் அலுவலக ரீதியாக அனைத்து ஒத்துழைப்பும் தந்தார்கள். எனினும் இயக்குநர் K.I. வாசுவின் பங்கு சிறப்பாக குறிப்பிடத் தக்கது. அவர்கள் தானும் பங்கு கொண்டு, விஞ்ஞானிகளையும் இத்தொண்டில் சிறப்பாக செயல்பட தூண்டினார்கள். இதற்காக செக்ரியில் "கிராம அறிவியல் மன்றம்" என்று ஒரு அமைப்பு ஏற்படுத்தி டில்லியில் CSIR தலைமை நிறுவனத்தையும் ஈடுபடச் செய்தார்கள்.

அடிகளார் அவர்கள் ஒருங்கிணைப்பாளராக இருந்து செக்ரி விஞ்ஞானிகள் திட்டக்குழுத் தலைவர்களாக செயல்பட்டார்கள். முனைவர் C.V. சூரியநாராயணா, B.A. ஷெனாய் அதன் பின் முனைவர் K. பாலகிருஷ்ணன் திட்டக்குழு தலைவர்களாக பணியாற்றி

இருக்கிறார்கள். இவர்களில் திட்டக்குழு செயல்பாடுகளுக்கு உயிர்கொடுத்தவர் B.A. ஷெனாய். கிராம வளர்ச்சியிலும், கிராமத்தில் தொழில்கள் அமைப்பதிலும் தம்மை முழுமையாக ஈடுபடுத்திக்கொண்டவர். அர்ப்பணித்துக் கொண்டவர். அடிகளார் அவர்களின் அன்பிற்கு பாத்திரமானவர். திட்டக்குழு கூட்டத்தின்போது, அவருக்கு ப்ளாஸ்க்கில் அடிகளார் அவர்கள் தேநீர் கொண்டு வரச்சொல்லி அடிக்கடி வழங்குவார்கள்.

விஞ்ஞானி ஷெனாய் அவர்களின் மறைவிற்குப் பிறகு அடிகளார் அவர்கள் மேல்நிலைப் பள்ளியில் உள்ள அரங்கிற்கு "ஷெனாய் கலையரங்கம்" என்று பெயரிட்டு அவருக்கு நினைவு அஞ்சலி செய்தார் என்பது அவர்கள் இருவருடைய உறவை உணரவைக்கும்.

மாதந்தோறும் நான்காவது சனிக்கிழமை நடக்கும் திட்டக்குழுக் கூட்டத்திலும், மற்ற சிறப்பு கூட்டங்களிலும் செக்ரி விஞ்ஞானிகள் கலந்து கொண்டு தங்களுடைய ஆலோசனைகளை வழங்கியும், அவற்றை செயல்படுத்தும் போதும் அதற்கு உதவியும் வந்தார்கள். அவர்கள் தங்கள் விடுமுறை நாட்களிலும், அலுவலக நேரத்திற்குப் பிறகும் தான் தங்களை கிராம வளர்ச்சிப் பணியில் ஈடுபடுத்தி கொண்டார்கள் என்பது குறிப்பிடத்தக்கது. அவர்களுடைய பணி திட்டக்குழு செயல்பாடுகளுக்கு முத்தாய்ப்பாக இருந்தது.

அனைத்துப் பணிகளையும் வரிசையிட்டுக் காட்டுவது கடமை என்ற போதிலும் இக்கட்டுரை ஆய்வகத்தின் கண்டுபிடிப்புகள் சில நமது மாவட்டத்தில் தொழிலாக உருவெடுத்த வாய்ப்புகளைப் பற்றி குறிப்பாக பேசுவது பயனுள்ளதாக இருக்கும்.

தீப்பெட்டித் தொழிற்சாலை குறுந்தொழிலாக கூட்டுறவுத் துறையிலும் சிறப்பாக செயல்பட்டு கிராமங்களில் உள்ள எளிய மக்களுக்கு வருவாய் ஈட்டித் தருவதாக அமைந்திருந்தது. குன்றக்குடியிலும் இரண்டு கூட்டுறவுச் சங்கங்கள் செயல்பட்டு வந்தன. தீக்குச்சிகள் தயாரிப்பதற்குத் தேவையான மூலப்பொருட்களில் ஒன்று பொட்டாசியம் குளோரைட். இது வெடிமருந்துகளிலும் பயன்படுத்தப் படுகிறது. இப்பொருள் மின் வேதியல் முறையில் பொட்டாசியம்

குளோரைட் (இது உரத்திற்கும் பயன்படும்) என்ற மூலப்பொருளிலிருந்து மின்பகுப்பு (Electrolysis) மூலம் பெறப்படுகிறது. ஆக, இந்த வேதியல் மாற்றத்திற்கு வேண்டிய முக்கிய மூலப்பொருள் "மின்சாரம்" ஆகும். கோடையில் அந்தக் காலங்களில் மின்வெட்டு 3 மாதங்கள் கடுமையாக இருக்கும். ஆகையால் பொட்டாசியம் குளோரேட் கிடைப்பது அரிது. ஓரளவு கிடைத்தாலும் இரண்டு பங்கு விலையாகும். சாதாரணமாக ஒரு கிலோ 15 ரூ.க்கு விற்ற குளோரேட் ரூ. 30 – 35 வரை விற்கும். இதனால் குறுந்தொழில்கள் முழுமையாக செயல்படமுடியவில்லை. தொழிலாளர்கள் அவதியுற்றனர். இந்த நிலை அப்பொழுது பிரிக்கப்படாமல் இருந்த இராமநாதபுரம் மாவட்டம் முழுவதிலும் இருந்தது.

இந்த பிரச்சனை திட்டக்குழுவில் விவாதிக்கப்பட்டது. பொட்டாசியம் குளோரேட் தயாரிக்கும் தொழில் நுட்பம் செக்ரியில் இருந்தது. அது சிறிய அளவில் தயாரிக்கக்கூடிய முன்னோடி தொழிலகம் (Pilot Plant) அளவிற்கு செம்மைப்படுத்தப்பட்டிருந்தது. அதுவும் சீனாவுடன் நடந்த (1961-ல்) சண்டையின்போது செக்ரி உடனடியாக இதை தயார் செய்து பாதுகாப்புத் துறைக்குத் தரவேண்டிய சூழ்நிலையில் செம்மைப்படுத்தப்பட்டது.

இதன் அடிப்படையில் இந்த மாவட்டத்தில் குன்றக்குடியில் பொட்டாசியம் குளோரேட் தயாரிக்கும் தொழிற்சாலை ஆரம்பிக்கக் கூடிய சாத்தியக்கூறுகளை ஆராய ஒரு குழு அமைக்கப்பட்டது. செக்ரியிலிருந்து முனைவர் K.C. நரசிம்மன் தலைமையில் ஒரு குழுவும், மாவட்ட கூட்டுறவுத் தொழில் அலுவலர்கள் கூட்டுறவுத் துறை செயலர்கள் ஆகிய அடங்கிய குழு ஒன்று அடிகளார் அவர்கள் தலைமையில் கூடியது.

நேருஜி பாலிதீன், அண்ணா பேட்டரி, கஸ்தூரிபாய் தீப்பெட்டி, மருதுபாண்டியர் கதர் கிராமத் தொழில், பெரியார் முந்திரித் தொழிற்சாலை என்று இருந்தது. இதுபோல் குளோரேட் தொழிற்சாலைக்கு பாரதி குளோரேட் தொழிற்சாலை என்று பெயர் வைத்தார்கள். அடிகளார் அவர்கள் அனைத்து கூட்டுறவுத் தொழிலகங்களுக்கும் நாட்டின் போற்றுதலுக்குரிய தலைவர்கள் பெயர்களை வைப்பதுதான் வழக்கம்.

அன்றைய காலகட்டத்தில் இது ஒரு நடுத்தர தொழில் (Medium Scale Industry) நாள் ஒன்றுக்கு 1 டன் உற்பத்தித் திறன் வாய்ந்த தொழிற்சாலை அமைப்பதற்கு ரூ. 35 லட்சம் மதிப்பீடு செய்யப்பட்டிருந்தது. கூட்டுறவுத் துறையில் ஆரம்பித்தால் 10 விழுக்காடு சொந்த முதலீடாக இருந்தால் கூட 3.5 லட்சம் மெம்பர்கள் கொடுக்க வேண்டும். அரசு அலுவலர்கள் ஒரு ஆலோசனை தந்தார்கள். ஒவ்வொரு கூட்டுறவுத் தீப்பெட்டி தொழிற்சாலையும் ரூ. 25,000 பங்குத் தொகையாக கொடுத்து இந்தத் தொழிலில் பங்குதாரராக ஆகலாம். அதன்படி மாவட்டத்திலுள்ள தீப்பெட்டி தொழில் சார்ந்த அனைத்து தொழில் கூட்டுறவுச் சங்கங்களையும் சேர்த்து பொட்டாசியம் குளோரேட் தொழிற்சாலைக்கான சொந்த முதலீடு சேர்க்கப்பட்டது. தொழிற் திட்டத்தைக் கொடுத்து தொழிற் கூட்டுறவு வங்கியின் மூலம் எஞ்சியுள்ள தொகையை கடனாகப் பெறுவது என்று தீர்மானிக்கப்பட்டது.

முனைவர் K.C. நரசிம்மன் குழு செக்ரியின் மூலமாக நாள் ஒன்றுக்கு ஒரு டன் உற்பத்திக்கான திட்டத்தை நிதி ஆதாரங்களுடன் (Bankable Project) வழங்கியது. செக்ரி இயக்குநர் முனைவர் H.V.K. உடுப்பா இந்த தொழில்நுட்பத்தை அடிகளார் அவர்களின் வேண்டுதலின் பேரில் ரூ. 10,000 கட்டணத்திற்கு கொடுத்தார். செக்ரியின் தொழில் நுட்பம் நமது மாவட்டத்தின் வளர்ச்சிக்காக அதுவும் கூட்டுறவுத் துறையாக இருப்பதால் இத்தொகைக்கு கொடுக்கிறோம் என்று கூறினார்கள்.

தொழிற்துறை இயக்குநர் அனுமதி பெற்று அதற்கான பல்வேறு உரிமங்களும் பெற்று திட்டம் துவங்கியது. செக்ரி நிறுவனம் S. சடகோபன் என்ற விஞ்ஞானியை திட்டத்தை செயல்படுத்த ஒரு ஆண்டிற்கு அனுப்பியது. (Deputation)

தொழிற்சாலை துவங்குவதற்கு ஒரு ஆண்டு காலம் பிடித்தது. அந்த ஓராண்டு காலத்தில் அடிகளார் அவர்கள் அடிக்கடி கூட்டங்கள் கூட்டி ஒவ்வொரு நிலையிலும் ஏற்பட்ட தேக்கங்களை தகர்க்க அயராது உழைத்தார்கள். STD கிடைக்காவிட்டால் Lightning Call கள் பறக்கும். தன்னுடைய உதவியாளர்களையும் ஆங்காங்கே அனுப்பி கோப்பை (File) கண்டுபிடித்து நகர்த்தினார்கள்.

இந்தத் தொழிலுக்கு மின்சாரம் முக்கிய மூலப்பொருள் என்று கூறினோம். அடிகளார் அவர்களின் பெரும் முயற்சியால் மின்சாரம் தடைபடாமல் பெறுவதற்கு காரைக்குடி சப்-ஸ்டேஷனிலிருந்து நேராக H.T. இணைப்புப் பெறப்பட்டது. தொழிற்சாலைக்கு வேண்டிய 5 ஏக்கர் நிலம் அடிகளார் அவர்கள் கொடுத்தார்கள். வங்கிக்கடன் பெற்ற பிறகு புதிதாகக் கட்டிடம் கட்டி, இயந்திரங்கள் வாங்கப்பட்டு, மின் இணைப்பு பெற்று ஒரு ஆண்டுக்குள் உற்பத்தியும் துவங்கப்பட்டது. தனியார் துறையில் ஒரு கிலோ 35 ரூபாய்க்கு விற்கப்பட்ட குளோரேட் இத்தொழில் தொடக்க நாளன்று 18 ரூபாய்க்கு விற்கத் தொடங்கினார்கள் என்பது குறிப்பிடத்தக்கது.

துவக்க விழாவிற்கு முதல் நாள் இரவு வரை மின் இணைப்பை சக்தியூட்ட (Energise) அனுமதி வரவில்லை. காரணம் அறிந்த அடிகளார் அன்று இரவே உதவியாளரை காரில் கோயம்புத்தூருக்கு அனுப்பி, ஆவன செய்து, துவக்க நாள் காலையில் அனுமதி பெற்றது மறக்க முடியாத நிகழ்ச்சி.

அடிகளார் அவர்கள் எங்களுடனும் பணியாளர்களுடனும் கட்டிட இடத்தில் பல இரவுகள் வெகு நேரம் தங்கி உற்சாகப்படுத்தி தேநீர், சிற்றுண்டி, உணவு ஆகியவற்றிற்கு அவ்வப்பொழுது ஏற்பாடு செய்து தந்தார்கள். இத்துறையைச் சார்ந்த செக்ரி விஞ்ஞானிகளும் குறிப்பாக முனைவர் நரசிம்மன், திரு. நாகலிங்கம், முனைவர் புஷ்பவனம், திரு. பழனிச்சாமி, திரு. சடகோபன் போன்ற பல விஞ்ஞானிகள் அயராது உழைத்தனர். இதில் விஞ்ஞானி சடகோபனின் பங்கு மிக முக்கியமானது. தொழிற்சாலையை ஆரம்பிக்க வேண்டிய அனைத்து வேலைகளையும் கட்டிடம் முதல் குளோரைட் உற்பத்தி வரை முழுப்பொறுப்பு எடுத்துக் கொண்டார்கள். முன்னோடி தொழில் கூடத்திலிருந்து ஒரு பெரிய தொழிற்சாலையாக் மாற்றும்போது உள்ள பிரச்சனைகளை சமாளித்து வெற்றி கண்டார். அரசுத் தொழில் துறையும் குறிப்பாக கூட்டுறவுத் துறை நல்ல ஒத்துழைப்பை நல்கியது.

செக்ரியில் ஆரம்பக் கட்டத்தில் நிர்வாக அலுவலர்கள், தொழில் நுட்ப அலுவலர்கள் மற்றும் விஞ்ஞானிகள் கிராம வளர்ச்சிப் பணிகளில் பெரிய எண்ணிக்கையில் ஈடுபட்டிருந்தார்கள். காலப்போக்கில் ஒரு சில விஞ்ஞானிகள் மட்டும் தங்களைத் தொடர்ந்து ஈடுபடுத்திக் கொண்டார்கள். முனைவர் P. சுப்பையா (தொழில் தலைவர்), முனைவர் N.வெங்கடகிருஷ்ணன், திரு. R. சொக்கையன், முனைவர்

M. இராகவன், விஞ்ஞானி R.P. பழனிச்சாமி, விஞ்ஞானி இராமு, திரு. K.R. இராமகிருஷ்ணன் போன்றவர்கள் தங்களை முழுமையாக ஈடுபடுத்திக் கொண்டார்கள்.

குளோரைட் தொழிற்சாலை வெற்றிகரமாக பல ஆண்டுகள் செயல்பட்டு அதன் விரிவாக்கத் திட்டமும் செயல்படுத்தப்பட்டது. ஒரு நாளைக்கு 1 டன் உற்பத்தியலிருந்து 1½ டன் ஆக உயர்த்தப்பட்டது.

தீப்பெட்டித் தொழில்கள் குடிசைத் தொழில்களிலிருந்து நீக்கப்பட்டு அரசால் பெரிய நிறுவனங்களுக்கும் உரிமம் வழங்கப்பட்டது. இதனால் மீண்டும் தீப்பெட்டித் தொழில்கள் கிராமங்களில் நலிவுற்றன. குளோரைட் விற்பனையும் குறைய ஆரம்பித்தது. மேலும் நமது மாநிலத்தின் மின்கட்டணம் அண்டை மாநிலங்களைக் காட்டிலும் (கேரளா, பாண்டிச்சேரி) மிகவும் கூடுதலாக இருந்தது. இன்றும் இருக்கிறது. ஆகையால் இத்தொழிற்சாலைகள் தனியார் துறையில் இம்மாநிலங்களில் நிறுவப்பட்டு குறைந்த விலைக்கு விற்கப்பட்டது. விலையில் போட்டியிட முடியாமல் பாரதி குளோரேட் தொழிலகம் நலிவடையத் தொடங்கி செயலிழந்தது.

சிந்திக்க வேண்டியது என்ன? அடிகளரர் அவர்கள் ஒரு பிரச்சனை, தடங்கல் என்று வரும்போது அதற்கு உடனடியாகத் தீர்வு காண விரும்பி, சம்பந்தப்பட்ட துறைகளைக் கலந்து பேசி விரைவாக நடவடிக்கை எடுத்து தொழிலகங்கள், தொழிலாளிகளின் இடர்பாடுகளை நீக்கும் திறமை படைத்திருந்தார். பணத்தைப் பொருட்படுத்தமாட்டார். உழைப்புக்கு அஞ்சார்; விரைந்து செயல்படத் துடிப்பார். விஞ்ஞானிகளையும், அரசு அலுவலர்களையும் ஒருங்கிணைத்து ஒரு நவீனத் தொழிற்சாலையை கிராமத்தில் அமைத்து நேரடியாக 50 நபர்களுக்கு வேலைவாய்ப்பு ஏற்படுத்திக் கொடுக்கவும், தீப்பெட்டி குடிசைத் தொழில்களில் வேலை செய்யும் நூற்றுக்கணக்கான தொழிலாளர்களுக்கு தொடர்ந்து வேலை கிடைக்கவும் செயல்பட்டார்கள். இதைத் தான் நான் முந்தைய கட்டுரையில் அவருடைய "மனோ வேகம், செயல்படும் வேகம்" என்று குறிப்பிட்டேன்.

அடிகளார் அவர்கள் செக்ரியிலிருந்து பேட்டரி தொழில் நுட்பம், வண்ணங்கள் தயாரிக்கும் தொழில் நுட்பம், அலுமினிய கட்டிடப் பொருட்கள் தயாரிக்கும் தொழில் நுட்பங்கள் கிராமங்களில் கொண்டுவர முயற்சித்தார்கள். அதை ஒரு இடைவெளி விட்டு பிறகு பார்க்கலாம்.

(தொடரும்)

# வாயில் எது?

(கவிவேந்தர். கா. வேழவேந்தன்)

காதலுக்கு வாயில் எது? கண்கள்! நல்ல
கவிதைக்கு வாயில் எது? உணர்ச்சி! பாழும்
மோதலுக்கு வாயில் எது? கோபம்! வாழ்வின்
முன்னேற்ற வாயில் எது? உழைப்பு! நெஞ்ச
வேதனையின் வாயில் எது? குற்றம்! காணும்
விடியலுக்கு வாயில் எது? ஊக்கம்! என்றும்
சாதனைக்கு வாயில் எது? முனைப்பு! நந்தம்
தமிழுக்கு வாயில் எது? இனிமை என்பேன்!

பதவிக்கே வாயில் எது? உதவி! போற்றும்
பண்புக்கே வாயில் எது? ஒழுக்கம்! செய்யும்
உதவிக்கே வாயில் எது? பரிவு! கேட்கும்
உரிமைக்கே வாயில் எது? கடமை! ஓடும்
நதிப்பெருக்கின் வாயில் எது? அருவி! பேசும்
நாவண்மை வாயில் எது? கருத்து! தோன்றும்
புதுமைகட்கே வாயில் எது? தேடல்! ஆழ்ந்த
புலமைக்கே வாயில் எது? நூல்கள் என்பேன்!

## குழந்தைக் கல்வியே குடிமையின் ஏற்றமாம்.

கல்வி கற்பதற்கு வாய்ப்பில்லாத குழந்தைகளைக் காணும் போது நான் வேதனையுறுகிறேன். அவர்களுக்கு உணவும் உடையும் கூடக் கிடைப்பதில்லை. இன்றைய குழந்தைகளுக்குக் கல்வி இல்லையெனில் நாளைய இந்தியாவின் நிலை என்ன? ஒவ்வொரு குழந்தைக்கும் இலவசக் கல்வி அளிப்பது அரசாங்கத்தின் முக்கியக் கடமையாகும்.

**- அண்ணல் நேரு**

# சிந்தனை வட்டம்

மனிதருள் மாணிக்கம் நேரு பெருமகனார் உதித்தது
நவம்பர்த் திங்கள் 14. அந்நாள் -
அவர் விழைவின்படி குழந்தைகள் தினம்!
குழந்தைகள் குதூகலிக்கின்ற நன்னாள்!

"கோடி மின்னலின் சக்தியோடு
எதையும் உட்கிரகிக்கும் சர்வ வல்லமை படைத்த குழந்தைகள்
எவ்விதம் பேணப்பட வேண்டும்?

ஏகபோக உழைப்புச் சுரண்டலுக்கு இலக்காகி,
நொந்து நூலாகின்ற மகளிரின் - குழந்தைகளின் மாண்புகள்
எவ்வாறு காக்கப்பட வேண்டும்?
குழந்தைகள் - தொழிலாளர்கள் ஆகிடும்போது - ஆக்கப்படும்போது
சமூகஅவலம் எவ்வாறெல்லாம் தோற்றமளித்தது
துயரப்பூ பூக்கும்"

இந்த நிலைமை - இந்த நாட்டில் இன்றே இப்பொழுதே
ஏன், வேரோடும் - வேரடி மண்ணோடும்,
சட்டத்தாலும் - சமுதாய முற்போக்குச் செயல்பாடுகளாலும்
அழிக்கப்பட வேண்டும்

என்பவை குறித்து, தலையங்கம் சொல்லியுள்ள விதம், நாட்டின் - குழந்தைகளின் நலம் விரும்பிகட்கு வெகு இதம்!

குழந்தைகள் புத்தகங்கள்! அவர்களைக் கிழித்து விடாதீர்கள்;
மென்மையாகக் கையாளுங்கள்!
குழந்தைகள் மலர்கள்! அவர்களைக் கசக்கி விடாதீர்கள்!
குழந்தைகள் தெளிந்த நதி, மாசுபடுத்திவிடாதீர்கள்!
குழந்தைகள் குடும்பச் சொத்தல்ல; தேசத்தின் சொத்து!
அவர்களைப் பாதுகாப்பதும் - பராமரிப்பதும் - முறையாக வளர்ப்பதும்
அனைவரின் அன்றாட அவசியக் கடமை!
அவர்களைக் காப்பதால் மட்டுமே புதிய தேசத்தை உருவாக்க இயலும்

என்பவை யாவும்,
குழந்தைச் சமுதாய விடியலுக்குச் -
சீர்வளர்சீர் அடிகளார் பெருந்தகை அவர்கள்
இசைத்துள்ள இனியநற் பூபாளம்!
சித்திரைச் சோலைகளின் முத்திரைக் கருத்துக்களை
மொத்தமாய் மனத்தில் பதிப்பதே,
சிறப்பாசிரியர் அவர்களின் பொன்னடிகளுக்கு,
நாம் செலுத்தும் சிறப்பு நன்றி வழிபாடு!

- அவிநாசி **தமிழமுதன்**

உ

சிவமயம்




# தெய்வப்பழநியில் புகழ்பெற்றது

## பழநி

## பரிமள விலாஸ்

# S. சித்தநாதன்

## ஜவ்வாது வாசனை விபூதி

## &

## ஸ்பெஷல் பஞ்சாமிர்தம்

### வாங்கி உபயோகியுங்கள்

**Prop : S. சித்தனாதன் சன்ஸ்**

**அடிவாரம், பழநி – 624 601.**

போன் கடை : 242405 வீடு & ஸ்டோர் : 242406



# மக்கள் கல்வி நிலையம்

(மனிதவள மேம்பாட்டு அமைச்சகம், இந்திய அரசு)

**குன்றக்குடி - 630 206**

✆ : 04577 - 264567 Mobile : 94433 64200

குன்றக்குடி மக்கள் கல்வி நிலையம், கிராமம் மற்றும் நகர்ப்புற மக்களுக்கு கீழ்க்கண்ட தொழில்நுட்ப பயிற்சிகள் வழங்கிவருகிறது. பயிற்சி நிறைவு பெற்றபின் சான்றிதழ்களும், தொழில் துவங்க ஆலோசனைகளும் வழங்கப்படும். சுய உதவிக் குழுக்கள், கிராமப்புற மக்கள், இளைஞர்கள், பெண்கள் அனைவரும் இந்த வாய்ப்பை பயன்படுத்திக்கொள்ளுமாறு கேட்டுக்கொள்கிறோம்.

இயக்குநர்,

**மக்கள் கல்வி நிலையம், குன்றக்குடி.**

## பயிற்சிகள் (TRADES)

1. தையல் பயிற்சி 2.கணிப்பொறி பயிற்சி 3. எலக்ட்ரிக்கல் வயரிங் மற்றும் ரிப்பேரிங் 4. மின் அணுக்கருவிகள் பழுதுபார்த்தல் 5.வெல்டிங் பயிற்சி (பற்றவைத்தல்) 6.சீட் மெட்டல் உற்பத்தி 7.பைபர்கிளாஸ் பொருள்கள் உற்பத்தி 8.கட்டிட தொழில்நுட்பம், பொருள்கள் உற்பத்தி 9.இரண்டு நான்கு சக்கர வாகன பராமரிப்பு மற்றும் ரிப்பேரிங் 10.கயிறு மற்றும் பாய் தயாரித்தல் 11. குளிர்சாதனப் பெட்டிகள் ரிப்பேரிங் 12.வார்ப்பு உலோக உற்பத்தி 13.ஹாலோ பிளாக் & மொஸைக் கற்கள் தயாரித்தல் 14. சாக்பீஸ், மெழுகுவர்த்தி தயாரித்தல் 15. கம்ப்யூட்டர்சாம்பிராணி, பினாயில் தயாரித்தல் 16. மருத்துவ உதவியாளர் 17.மருத்துவ உபகரணங்கள் பழுதுபார்த்தல் மற்றும் கயாளுதல் 18. திரை அச்சு வேலைகள் 19. வீட்டு உபகரணப் பொருட்கள் பழுதுபார்த்தல் 20.யோகா ஆசிரியர் பயிற்சி 21. ஓவியம் மற்றும் வரைபடம் வரைதல் 22. கைவினைப்பொருட்கள் தயாரித்தல் 23. உணவுப் பொருட்கள் தயாரித்தல் 24. கேஸ் வெல்டிங் 25. தொழில்முனைவோர் மேம்பாட்டுப்பயிற்சி 26. இயற்கை உயிர் உரம் (மண்புழு) தயாரித்தல் 27. வேளாண் சார்ந்த பயிற்சிகள் 28.தோட்டக்கலை சார்ந்த பயிற்சிகள் 29. கால்நடை சார்ந்த பயிற்சிகள் 3C. மின்சாதனப்பொருட்கள் பராமரிப்பு

தகுதி : தன்முனைப்பு, தன் ஆர்வம் மட்டும்.

பயிற்சி நேரம் : பயிற்சி நாள்தோறும் இரண்டு மணி நேரம் மட்டும். ஒன்றுக்கும் மேற்பட்ட பயிற்சிகளில் சேரலாம்.

குறிப்பு : ஒவ்வொரு பயிற்சிக்கும் பயிற்சி நிறைவு பெற்றபின் தேர்வின் அடிப்படையில் சான்றிதழ்கள் வழங்கப்படும்.

## தவத்திரு குன்றக்குடி அடிகளாரின்

# *புதிய நூல்*

உலகம் முழுக்கத் திருக்குறள் பரப்பப் பேரவை கண்டவர்; தம் வாழ்நாள் முழுக்க வள்ளுவ நெறியினை வழங்கி நின்றவர்; வாழ்ந்து நிலைத்தவர் ஆகிய அடிகள் பெருமான் எழுதிய திருக்குறள் உரை முதன் முதலாக, நூல் வடிவமாக!







**தவத்திரு குன்றக்குடி அடிகளார்**
**திருக்குறள் உரை**
(விலை. ரூ. 160/- பக்கங்கள் : 360)

பதிப்பகங்கள், கல்லூரி, பள்ளி, நிறுவனங்கள் மற்றும் இலக்கிய அமைப்புகள் இவற்றோடு மாணவ, மாணவியர்க்கும் "மக்கள் சிந்தனை" சந்தாதாரர்க்கும் விலைச் சலுகை உண்டு.

அடிகளாரின் முத்துவிழா வெளியீடு

**அருள்நெறிப் பதிப்பகம்**
குன்றக்குடி - 630 206
சிவகங்கை மாவட்டம்.

MAKKAL CHINTHANAI - November 2006 Price Rs. 5-00
Date of Publication 20-11-2006
Register of News Paper for India No. 85913/81 Register No. TN/SR-266/2006-2008






பெறுநர்

திரு ஆதீனகர்த்தர் அவர்கள்
கோவிலூர் ஆதீனம்
கோவிலூர்
காரைக்குடி (வழி)

அச்சிட்டோர் : சண்முகநாதன் அச்சகம், குன்றக்குடி. ✆ : 264166